பொறுப்பற்ற இலக்கண ஆசிரியராக இருந்திருக்க மாட்டார், அவற்றை அவர் அறிந்திருந்தால், அவற்றிற்கான இலக்கண அமைதி கூறியிருப்பார்; அவற்றை அவர் அறிந்தவர் அல்லர். அவர் மட்டுமன்று; அக்காலத்து ஆசிரியர் எவருமே அறிந்திருக்கமாட்டார்" எனக் கூறியதை ஏற்றுக்கொள்ளாத திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், "பாணினி, அப்பெயர்களை நன்கு அறிந்தவர்தாம். ஆனால், அப்பெயர்கள், சமஸ்கிருதச் சொற்களாக இல்லாமல், தமிழ்ச் சொற்களாகவே, அவை பற்றிய இலக்கணத்தை வகுக்கவில்லை எனக் கூறவேண்டுமே ஒழிய, அவர் அவற்றிற்கான இலக்கணம் வகுக்கவில்லை; ஆகவே அவர், அந்நாடுகளை அறிந்திருக்கவில்லை என்பது பொருந்தாது. திரு. பந்தர்காரின் இவ்வாதம், இருக்கு வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப்படவில்லை என்பது கொண்டு இருக்குவேத காலத்தில் ஆலமரமே இருக்கவில்லை என்பது போலும் பொருளற்ற வாதமாம்" (பக்கம் : 123, 124) என மறுத்துள்ளார்.

அங்கு அவ்வாறு வாதிட்ட திருவாளர் அய்யங்கார், கி. மு. 200இல் வாழ்ந்த பதஞ்சலி, "மதுராபுரக", "உறகபுரக" என்ற சொற்களுக்கான இலக்கண அமைதி கூறாது, "காஞ்சீபுரக" என்பதற்குமட்டும் இலக்கண அமைதி கூறிய தற்குப் பதஞ்சலி காலத்தில், வட இந்திய மொழி வல்லுநர்க் குத் தெரிந்திருக்குமளவு சிறப்புற்று விளங்கி இருந்தாலும், அது தனக்கென ஒரு தமிழ்ப் பெயரைக் கொண்டிருக்கவில் லை என வாதிடுவது எவ்வாறு பொருந்துமோ அறியோம்.

கி. மு. ஏழாம் நூற்றாண்டினராய பாணினியின் இலக்கண நூலாம் பாணினீயத்திற்குக் கி. மு. நான்காம் நூற்றாண்டில் விளக்க உரை அளிக்கவல்ல சமஸ்கிருதப் பேராசிரியர் காத்யாயனரையும், கி. மு. நான்காம் நூற்றாண்டில் மௌரியப் பேரரசனாகத் திகழ்ந்த சந்திரகுப்தனுக்கு அமைச்சனாக இருந்து அர்த்த சாஸ்திரம் எழுதிய சாணக்கியனையும் பெற்று அளித்த பெருமைக்கு உரியது காஞ்சிமாநகர் என்பது உண்மை. (தமிழர் வரலாறு : 123, 135, 142, 325 பக்கங்கள் காண்க).

காஞ்சிமாநகர், அத்துணைப் பழங்காலத்தில், பல்கலைக் கழகப் பெரு நிலையமாகத் திகழ்ந்தது என்றால், அது, அப்பெருநிலையைத் திடுமென, எடுத்த எடுப்பிலேயே அடைந்திருக்க இயலாது; அப்பெருநிலை, அம்மாநகரத்துக்கு வந்து குடியேறியவர்கள் காலத்திற்குப் பிறகே உருவாகி யிருக்கவும் இயலாது. அந்நிலை, அம்மாநகரத்து நிலைத்த குடியினராய, மண்ணுக்குரிய மக்களின் பல தலைமுறை இடைவிடா முயற்சியின் விளைவாகவே உருவாகியிருக்க வேண்டும். மேலும், அறிஞர் பெருமக்கள் பலரின் பிறப்பிடமாக வளர்ந்த ஒரு பெருநகர், தனக்கென ஒரு பெயரை, அது தோன்றிய காலத்திலேயே பெறத் தவறிவிட்டு, ஆங்கு வந்து குடியேறிய வடநாட்டுச் சமஸ்கிருத மொழியாளர், அவர்களின் மொழிப்பெயரால் பெயர் சூட்டும் வரை காத்திருந்தது என்பது, நகரங்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய வரலாற்று நெறியினை உணராதார் கூற்றே ஆம்.

இக்குற்றச்சாட்டு முறையான குற்றச்சாட்டு என்பதைத் திருவாளர் பி. டி. எஸ். அவர்களும் ஏற்றுக்கொள்வர். காவிரி வைகைக்கரைத் தமிழர்களாம் அம்மண்ணுக்குரிய மக்களை, இந்தியாவுக்கு வடக்கே இருந்து வந்த வெளிநாட்டினராக மதிக்கும் சில மதியிலா வரலாற்றாசிரியர்களின் கூற்றைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், "சில வரலாற்று ஆசிரியர் கள் திராவிடர்களின் மூதாதையர்களை, இந்தியாவின் வடமேற்கு அல்லது வடகிழக்குக் கணவாய்கள் வழியாக, நம்பிக்கை மிக்க நல்ல வழிகாட்டிகளின் துணையோடு, கொண்டுவந்து எடுத்த எடுப்பிலேயே முழுமை பெற்ற வெளிநாட்டு நாகரிகத்தோடு, காவிரி வைகைக் கரைகளில் குடியமர்த்துகின்றனர்" (பக்கம் : 2) எனக் கூறி எள்ளி நகையாடுவதும், அதேபோல், வட ஆரியர் வருகைக்கு முன்பே முதிர்ந்த நாகரிகம் பெற்று மூத்த குடியினராய தமிழர்களை, நாகரிகம் அற்ற காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்திருந்து, ஆரியர் வருகைக்குப் பின்னரே நாகரிகம் உலகத்தில் அடியிட்டவராகக் கருதும் வேத மந்திரங்கள், இராமாயண,

பாரதக் கதைகள், பழம்புராணங்களின் கூற்றை மறுத்து, "வடஆரியர்களால் தஸ்யூக்கள் என அழைக்கப்படும் தென்னாட்டுத் திராவிடப் பழங்குடியினர், நாடு கடத்தப் பட்டும், வாழ்விடம் தேடியும் அவ்வப்போது வந்து குடியேறிய, ஆரிய வந்தேறிகளால், நாகரிகம் பெறக் காத்திருந்த, நாகரிகம் கல்லாக் காட்டுமிராண்டிப் பழங்குடியினர் அல்லர்" (பக்கம் : 32) என, அவர் கூறி யிருப்பதும் காண்க.

கி.மு. நான்காம் நூற்றாண்டில் வடஇந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையிலான வாணிகம், எப்போதும் இருந்திராத அளவு மிகப்பெரிய அளவினை அடைந்திருந்தது என்று கூறிவிட்டுத் "தக்ஷண பாரதத்தில் பெரிய கனிவளச் சுரங்கங்களையும், வழிநெடுகிலும் மக்கள் பெருக்கத்தையும் கடந்து செல்லும் பெருவழிகள், பாடலியை அடையும் ஏனைய பெருவழிகளிலும் நனிமிகச் சிறந்ததாம்" எனக் கௌடல்யர் கூறியதை மேற்கோள் காட்டிப் புகைவண்டித் தொடர்களும், உந்துவண்டிகளும் அழிந்துவிடாமல் விட்டு வைத்திருக்கும் இடங்களில், இக்காலத்தும் நாம் காண்பது போல், கிரீச் எனும் ஒலி ஓயாது தொடர்ந்து எழக் குமரிமுதல் பாடலி வரையான, சீர்மிகு, சீர்கெட்ட நெடுஞ்சாலைகளில் செல்லும் மாடு பூட்டிய கட்டை வண்டிகளாம் வணிகச் சாத்துக்கள் மூலம், பெரிய வணிகப்போக்குவரத்து நடைபெற்று வந்தது என்றும் கூறியுள்ளார் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் (தமிழர் வரலாறு : பக்கம் ; 141 - 142 காண்க).

கி.மு. நான்காம் நூற்றாண்டின் நிலை, கடைச்சங்க காலத்தில் பெருகியிருக்குமே அல்லது, குறைந்திருக்காது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களை ஒருமுறை படிப்பவர்க்கும், பழந்தமிழகத்தில் பேரூர்களையும், சிற்றூர் களையும் இணைக்கும் பெருஞ்சாலைகள். தமிழ்நாடெங்கும் இடம் பெற்றிருந்தன என்பதும், அப்பெருஞ்சாலைகள் இருமருங்கிலும், நெடுகிலும், சிற்றூர்களும் பேரூர்களும் இடம் பெற்றிருந்தன என்பதும் தெற்றெனப் புலனாம்.

தொண்டைமான் இளந்திரையனைக் காணச் செல்லும் பெரும்பாணனுக்குச் செல்லும் வழியினைக் காட்டுவதாகக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப் படையில், அரசுக்கு வரவேண்டிய வரியினைத் தண்டுவோர், விற்படையோடு வழிநெடுக வீற்றிருக்கும் காவல் நிலையங்களையும் (80 - 82) அதனால், வழிச்செல்லுவார், கொண்டு செல்லும் பொருட்களைக் கொள்ளை கொண்டு ஓடிவிடும் கொடியோர் இல்லா வழி நலத்தையும் (39 - 41) உமணர், உப்புப் பொதி ஏற்றிய வண்டிகளின் பெருஞ்சாத்துத் தொடர்ந்து சென்று கொண்டே இருப்பதால், பெருவழிகள், இரவிடைச் செல்வார்க்கும் ஏமமாக அமைவதையும் (60 - 66) வழிப்போவார் தம் வயிற்றுப்பசி தீரத் தேக்கிலையில் உணவு படைக்கும், ஈத்திலை வேய்ந்த குடியிருப்புக்களைக் கொண்ட சிற்றூர்களையும் (88 - 105) செல்லும் வழி நெடுகிலும், செவ்வரிசிச் சோற்றினை வழங்கும் எயினர் காட்டரண்களையும் (121 - 133) பசுந்தினை அரிசிச் சோற்றைப் பாலுடன் கலந்து பருகப்பண்ணிப் பசி தீர்க்கும் கோவலர் குடியிருப்புக்களையும் (166 - 168) அவரைப் பருப்பு கலந்து ஆக்கிய வரகரிசிச் சோற்றை வருவார்க்குப் படைக்கும், வரகுவைக்கோல் போர்த்து வரிசை வரிசையாக உள்ள குடில்களைக் கொண்ட சிற்றூர்களையும் (191 - 196) விருந்தினர்க்குக் கோழிப் பொரியலோடு வெண்சோறு படைக்கும் வளமிக்க பேரூர்களையும் (254 - 256) கொழியல் அரிசிக் கூழைச் சுட்ட மீனோடு கொடுக்கும் வலைஞர் குடியிருப்புக்களையும் (274 - 282) நெய்யில் பொரித்த மாதுளங்காயோடு, மாவடு கலந்த இனிய உணவினை அளிக்கும் மறைகாப்பாளர் உறை பதிகளையும், (301 - 310) பிணவொடு சேரவிடாமலும், அரிசிமா தவிர்த்து வேறு எதையும் உண்ணவிடாமலும் ஓம்பி வளர்த்ததனால் கொழுத்த பன்றிக் கறியொடு களிப்பு தரும் கள்ளும் வழங்கும், செல்வம் கொழிக்கும், வான்தோய் மாடங்கள் மலிந்த பட்டினங்களையும் (336 - 345) வாழை, பலா முதலான பழவகைகளையும், பனநுங்கையும் தெவிட்டுமளவு வழங்கி, நீர் வேட்கை தணிக்கத் தெங்கின் நீரையும் வழங்கும் உழவர்

குடியிருப்புகளையும் (355 - 362) வரிசையாகக் கூறி, நாடு பல கடக்கவேண்டிய பெருவழி நலம் விரிவாக எடுத்துக் கூறப்பட்டிருப்பது, அதை உறுதி செய்வது காண்க.

ஆகப் பழந்தமிழ்க் காலத்தே பெருவழிகள், தமிழகம் எங்கும் அமைந்திருந்தன என்பதும் அப்பெருவழிகள், இருமருங்கும் அழகிய சிற்றூர்களையும், பேரூர்களையும் கொண்டிருந்தன என்பதும் தெளிவாயின; இப்பெருவழி நலத்தை அணிலாடு முன்றிலாரும், குடவாயில் கீரநக்கனாரும், கல்லாடனாரும், "அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்" என்ற அழகிய தொடரால் (குறுந் : 41, 79 அகம் : 9) பாராட்டி யிருப்பது அறிக. இவ்வாறு செல்லும் வழி நெடுகிலும், சிறுசிறு குடியிருப்புக்களே எனினும், நனிமிகப் பலவாய் இருத்தலின், வழிச்செல்வார் அச்சம் கொள்ளாது, நிழல் கண்டவழி நெடும்பொழுது இருந்து இளைப்பாறியும் மணல் பரந்த இடங்காணும் தோறும் வண்டல் முதலாம் ஆடல் புரிந்து அகமகிழ்ந்தும் செல்லுமாறு அறிவுறுத்தவும் பட்டனர்.

"நிழல் காண்தோறும் நெடியவைகி, மணல் காண்தோறும் வண்டல் தைஇ வருந்தாது ஏகு....நறுந்தண பொழில கானம்; குறும்பல் ஊர யாம் செல்லும் ஆறே" (நற் : 9) எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோ, வழி காட்டுவது காண்க.

பத்துப்பாட்டு எட்டுத்தொகையாகிய பழந்தமிழ்ப் பாடல்களில், நூற்று இருபத்தைந்துக்கும் மேற்பட்ட சிற்றூர், பேரூர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள், அள்ளூர், வேலூர் என்பன போல், ஊர் என முடிவன இருபத்தைந்து மட்டுமே. அவை ஒழிந்த நூற்றுக்கு மேற்பட்ட ஊர்களில், ஆர்க்காடு என்பதுபோல், காடு என முடிவன சில; ஆலங்குடி என்பதுபோல், குடி என முடிவன சில, இடையாறு என்பதுபோல், ஆறு என முடிவன சில. இவை போல்வன ஒருசில தவிர்த்து ஏனைய எல்லாம், அம்பர், உறந்தை, இருப்பை, குமரி, கூடல், கோழி, வஞ்சி, வேம்பி என்பன போலும், இடுகுறிப் பெயர்களாகவே அழைக்கப் பெற்றுள்ளன. இவ்வகையால் பெயர் பெற்ற ஊர்களில்,

ஆலங்கானம், ஆலமுற்றம் இருப்பை, காஞ்சி, வஞ்சி, வாகை போல்வன மரத்தால் பெயர் பெற்றவை; கரந்தை, காஞ்சி, தூசி, வஞ்சி, வாகை என்பனவற்றைப் புறத்திணை வகைகளால் பெயர் பெற்றனவாகவும் கொள்ளலாம்.

சமஸ்கிருதம் அல்லது, அது சார்ந்த மொழி வழங்கும் வட நாட்டில், ஊர்ப் பெயர்கள் "புரி" அல்லது "புரம்" என்பதை ஈற்றில் கொண்டனவாய், அயோத்தியாபுரி துவராகாபுரி, மதுராபுரி, அஸ்தினாபுரம் எனப் பெயர் சூட்டப்பட்டதை ஒட்டி, இச்சமஸ்கிருத மொழியாளர்கள், தமிழகத்தில் வேர் ஊன்றிய காலத்திற்குப் பின்னர்ப் "புரம்" என்பதை ஈற்றில் கொண்டுவிட்ட, இராமனாதபுரம், காஞ்சிபுரம், சோழலிங்காபுரம், திருவத்திபுரம், திருவனந்தபுரம், வாணாபுரம், விரிஞ்சீபுரம், விழுப்புரம் போலும் சில ஊர்ப் பெயர்கள் தமிழகத்திலும் இடம்பெற்று விட்டாலும், பண்டைத் தமிழகத்தில், எந்த ஒரு ஊர்ப் பெயரும் "புரம்" என்ற ஈற்றினைக் கொண்டதாக அமையவில்லை. அதுமட்டுமன்று, பழந்தமிழ்ப் புலவர்கள், "புரம்" என்ற ஈற்றுச் சொல் வடிவை அறவே வெறுப்பதும் செய்து வந்துள்ளனர். வடநாட்டுத் துவரகாபுரியைக் குறிப்பிட நேர்ந்த ஓரிடத்திலும், "புரி" என்ற அதன் ஈற்றையும், அதை, முதல் நிலையோடு இணைக்கும். இடைப்பகுதியையும் அறவே விடுத்து, "துவரை" என அழைப்பதிலேயே ஆர்வம் காட்டியுள்ளனர். "துவரை ஆண்டு நாற்பத்தொன்பது வழி முறை வந்த வேளிர்" (புறம் : 201) என்ற கபிலர் கூற்றினைக் காண்க. அதுபோலவே, கங்கைக்கரைப் பாடலிபுத்திரத்தைக் குறிப்பிட நேர்ந்த இரு இடங்களிலும் "புத்திரம்" என்ற அதன் ஈற்றுப் பகுதியைக் கழித்துவிட்டுப் "பாடலி" என்றே குறிப்பிட்டுள்ளனர். "பொன்மலி பாடலி" (குறுந் : 75) "நந்தர் சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கைநீர் முதல் கரந்த நிதியம்" (அகம் : 262) என்ற தொடர்களைக் காண்க.

இவ்வாறு, வட இந்திய ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடும் போதும், சமஸ்கிருத மொழியாளர்கள், அப்பெயர்களோடு இணைத்து வழங்கும் "புரம், புத்திரம்" என்பனவற்றை

விடுத்தே எடுத்தாள்வதை மரபாகக் கொண்டுவிட்ட பழந்தமிழ்ப் புலவர்கள், தமிழகத்துத் தலையாய நகர்களுள் ஒன்றாகிய காஞ்சிக்கு, அவ்வட நாட்டுப் பெயர் ஈற்றுப் பகுதியாம் "புரம்" என்பதை இணைத்துக் "காஞ்சீபுரம்" என வழங்கினர் என்பது, வாத நெறியில் ஏற்றுக் கொள்ள இயலாத ஒன்று. ஆகவே, அந்நகர்க்குப் பழந்தமிழர் இட்டு வழங்கிய பெயர் "காஞ்சி" என்பதே; அம்மாநகரில் வந்து வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர், தங்கள் வட நாட்டுப் பெயர் மரபை ஒட்டி, புரம் என்பதைக் காஞ்சியோடும் இணைத்துக் காஞ்சீபுரம் என மாற்றி அழைத்தனர் என்பதே, இயல்பாகப் பெறக்கூடிய முடிவாகும்.

காஞ்சி என்பதே அதன் இயல்பான பெயராயின், ஏறத்தாழ இருநூற்றுக்கும் மேற்பட்ட ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடும் பழந்தமிழ்ப் பாக்களில், "காஞ்சி" என்ற பெயரும் இடம் பெற்றிருக்க வேண்டும்; ஆனால், அது இடம் பெறவில்லை. "காஞ்சிஊர" "காஞ்சி ஊரன்" என்று தொடர்கள் (அகம் : 96 குறுந் : 10, 127) இடம் பெற்றுள்ளன என்றாலும், அவை, "காஞ்சி" என்னும் ஊர்ப்பெயர் உணர்த்துவனவல்ல. காஞ்சி மரங்கள் நிறைந்த ஊருக்கு உரியவன் எனும் பொருள் தந்து காஞ்சி என்ற மரத்தின் பெயரை உணர்த்துவனவே. அதுபோலவே, மகளிர், "காஞ்சி நீழல் குரவை அயரும்" (அகம் : 336), "நீர்த்தாழ்ந்த குறுங் காஞ்சிப் பூக்கதூஉம் இளவாழை" (புறம் : 18) "நாரை தேம்கொள் மருதின் பூஞ்சினை முனையின் காமரு காஞ்சித் துஞ்சும்" (புறம் : 351) என வேறு பல இடங்களிலும், "காஞ்சி" எனும்சொல் இடம் பெற்றிருந்தாலும், அங்கெல்லாம், அது, காஞ்சிமரம் எனும் பொருளில் வந்துள்ளதேயல்லது காஞ்சிநகர் எனும் பொருளில் வரவில்லை, என்ற வாதத்தையும் வைத்துள்ளார் திருவாளர். பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள். (பக்கம் : 323)

திருவாளர் அய்யங்கார் அவர்கள் மேலே எடுத்துக் காட்டிய தொடர்களில் இடம்பெறும் "காஞ்சி" எனும் சொல், மரத்தின் பெயரையே குறிக்கிறது என்பது உண்மை.

ஆனால் "காஞ்சி" எனும் சொல், ஊர்ப் பெயரைக் குறிக்கும் வகையில் ஆளப்படுவதும் பழந்தமிழ்ப் பாடல்களில் இடம் பெற்றுளது. கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைப் பாடிய பரணர், தம்முடைய பதிற்றுப்பத்துப் பாடல் ஒன்றில், அவனை வாழ்த்துங்கால், "நின் பெயர் வாழியரோ... காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே" (பதிற்று : 48) என வாழ்த்தியுள்ளதும், அக்காஞ்சியாறு, கோவை மாவட்டம் பேரூர்க்கு அருகில் ஓடும் ஆறு எனும் பொருள் கொண்டு அதை உறுதி செய்ய, "மீகொங்கில் அணி காஞ்சி வாய்ப் பேரூர்ப் பெருமானை" என்ற நம்பியாரூரர் தேவாரப் பாடலை எடுத்துக் காட்டாகக் கொள்வதும் காண்க.

கொங்கு நாட்டில் ஓடும் ஓர் ஆறு, காஞ்சி எனும் பெயர் பெற்றுளது. அது ஓடும் இடம், தமிழகத்து மக்கள் ஒரு சிலரால் மட்டுமே அறியத்தக்கதாக, தமிழகத்தின் ஒரு கோடியாம் கொங்கு நாடே எனினும், காஞ்சி எனும் பெயரே, பழந்தமிழ் இலக்கியத்தில் இடம் பெறவில்லை என்ற கூற்றினை மறுக்கவல்ல, நல்ல வலுவான சான்றாக, அது அமைந்துவிட்டது.

மேலும், காஞ்சி எனும் பெயரைக் கொங்கு நாடு சென்றுதான் தேடி அலையவேண்டும் என்ற தேவையும் இல்லை. காஞ்சியிலேயே, அது, காணக்கிடக்கிறது. நற்றிணை 123 ஆம் பாடலைப் பாடிய புலவர் பெயர், காஞ்சிப் புலவர் என்பது. அதுபோலவே, குறுந்தொகை, 173 ஆம் பாடலைப் ப்பாடிய புலவர், மதுரைக் காஞ்சிப்புலவர் என்பது, அதே குறுந்தொகையில் 213, 216 பாடல்களைக் பாடிய புலவர் பெயர், கச்சிப் பேட்டுக்காஞ்சிக் கொற்றனார் என்பது. இவர் பெயரில் காஞ்சியின் பிறிதொரு பெயரும், பெரும் பாணாற்றுப்படையால், திரையன் தலைநகராம் பெருமைப் படுத்தப்பட்டதுமான கச்சியும் இணைந்தே வழங்கப் பெறுவது கவனிக்கத்தக்கது. மேலும், அதே குறுந் தொகையில், 30, 172, 180, 192, 197, 287 பாடல்களைப் பாடிய ஒரு பெண்பாற்புலவர் பெயர், கச்சிப்பேட்டு நன்னாகையார் என்பது; கூறிய எடுத்துக்காட்டுக்களால், புலவர் பலரை

அளித்த பெருமைக்கு உரியது காஞ்சியும், கச்சியும் என்பதும், தத்தம் இயற்பெயர்களோடு, தாம் பிறந்த ஊர்ப்பெயரை இணைத்துக்கொள்வது, தமக்குப் பெருமை சேர்க்கும் என உணர்ந்து சேர்த்துக் கொள்ளப்படுமளவு பெருமை பெற்ற பெருநகராகக் காஞ்சியும், கச்சியும் திகழ்ந்தன என்பதும் தெளிவாயின.

புலவர்களை ஈன்று அளித்த பெருமை, காஞ்சிக்கும் கச்சிக்கும் மட்டுமே தனி உரிமையாய் அமைந்துவிடவில்லை. அப்பேரூர்களைத் தலைநகராகக் கொண்ட காஞ்சிக்கு அணித்தாக, மேற்கே உள்ள தாமலும், காஞ்சிக்குக் கிழக்கே, சற்றே தொலைவில் உள்ள உரோடகமும் கூடப் புலவர்களைப் பெற்றளித்த பெருமையினைப் பங்கிட்டுக் கொண்டுள்ளன. சோழன் நலங்கிள்ளி தம்பி, மாவளத் தானோடு, ஒரு நிகராக அமர்ந்து வட்டாடும் நெருக்கமும், அவ்வாட்டாடலை அவன் பிழை பட ஆடிய போது, அவனைக் கண்டிக்கும் உரிமையும், அவன், தன் பிழை உணர்ந்து வருந்தியபோது, அவனைப் பாராட்டிய பெருநட்பும் உடைய பெருந்தகைப்புலவர் பல்கண்ணனார் பிறந்த ஊர், காஞ்சி நாட்டுத் தாமலே, (புறம் : 447) நற்றிணை 306, குறுந்தொகை 155, நெடுந்தொகை 23, 95, 191 ஆகிய பாடல்களைப் பாடிய கந்தரத்தனார், பிறந்த ஊரும் காஞ்சி நாட்டு உரோடகமே.

ஆக, வேங்கடத்தை அடுத்த காஞ்சிமண்டலம் தமிழ் வழங்கிய மண், தன்மொழிப் பெயராம், காஞ்சி, கச்சி மாநகர்களை, இருபெரும் தலைநகர்களாகக் கொண்டிருந்த பழம் பெருமை வாய்ந்தது என்பது தெற்றெனத் தெளிவாக்கப் பட்டது.

காஞ்சியும், கச்சியும் தொண்டை நாட்டுத் தலைநகர்களாக இல்லையாயினும், பெருநகரங்களாக இருந்தன என்பது உண்மையாயின், அத்தொண்டை நாட்டுப் பல்வேறு பகுதிகளையும், பல்வளங்களையும் பாடிய பெரும் பாணாற்றுப் படை ஆசிரியர், தம்முடைய நெடிய பாட்டில், காஞ்சியைக் குறிப்பிடாமல், கச்சியை மட்டும் குறிப்பிட்டி

ருப்பது ஏன்? அவர், அது குறிப்பிடாமை, காஞ்சி இன்மையை உறுதி செய்வதாகக் கோடல் கூடாதோ என்ற கேள்வி எழல் கூடும். கேள்வி, விடையிறுக்க வேண்டிய முக்கிய கேள்விதான்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் பாக்களால் அறியப்படும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உள்ளிட்ட பாண்டிய அரசர்களைப் புகழ்ந்து பாடும் புலவர்களுள், மாங்குடி மருதன் தவிர்த்த அனைத்துப் புலவர்களும், அப்பாண்டிய அரசர்களோடு, அப்பாண்டியர் தலைநகரை இணைத்துப் பாடும்போது, மதுரையைக் கூறாமல், கூடலையே கூறியுள்ளனர். பாண்டியர் தலைநகரைக் குறிப்பிடும் பாடல்கள், நற்றிணையில் இரண்டு (39, 298) அகத்தில் ஐந்து (93, 116, 253, 296, 315) புறத்தில் ஒன்று (88).

நெடுநல்வாடை மூலம், செழியன் புகழ்பாடும் நக்கீரரும், அப்பாட்டில், மதுரை கூடல் என்ற இரண்டில் எந்த ஒரு பெயரையும் குறிப்பிடவில்லை எனினும், அவன் புகழ் பாடும் அகநானூற்றுப்பாடல் ஒன்றில் "நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன் பொன்மலி நெடுநகர் கூடல்" (213) எனக் கூடலை மட்டுமே குறிப்பிட்டுள்ளார்.

மதுரைக்காஞ்சி மூலம், நெடுஞ்செழியன் புகழ்பாடும் மாங்குடி மருதனார், அப்பாட்டில் 699 ஆம் வரியில் மதுரையைக் குறிப்பிட்டுள்ளார் என்றாலும், அது குறிப்பிடுவதன் முன்னர், 429ஆம் வரியில், "மாடம்பிறங்கிய மலிபுகழ் கூடல்" எனக் கூறி, கூடலுக்கே முதல் இடம் தந்துள்ளார்.

பாண்டியர் தலைநகர்க்கு, மதுரை, கூடல் என்ற இரு பெயர்கள் இருக்கவும், பாண்டியர் புகழ்பாடும் புலவர் பலரும், கூடலுக்கே முதல் இடம் தந்து குறிப்பிடுவது போல் வேங்கடம் அடுத்த தொண்டைநாட்டுத் தலைநகர்க்கு காஞ்சி, கச்சி என்ற இரண்டு பெயர்கள் இருக்கவும், அக்காஞ்சி நாடு பாடிய புலவர், பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர், காஞ்சியைக் குறிப்பிடாமல், கச்சியை மட்டும் குறிப்பிட்

டுள்ளார் எனக் கொண்டால், அவ்வாறுதான் கொள்ள வேண்டும். அப்பகுதி, தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை என்பதற்கு, அப்பகுதி தலைநகர்க்குத் தமிழ்ப் பெயர் இடப்படவில்லை என்பதைக் காரணமாக்க காட்டும் வாதம், பொருளற்ற வாதமாகப் போய்விடுவது காண்க.

வேதகாலம் கி. மு. 3000க்கும் கி. மு. 1500க்கும் இடைப்பட்டது என்பது, திருவாளர் அய்யங்கார் அவர்கள் முடிவு; தமிழர் வரலாறு ; முன்னுரை; பத்தி 7. காண்க. அவ் வேத காலத்தில், அணி நலம் குறித்து, வடஆரியர்கள், பயன் படுத்துப்பட்ட பொருள்களுள், தென்கோடி விளைபொருளாம் முத்து (பக்கம் : 22) வேத இலக்கியங்களில் "முக்தா" "விமுக்தா" என வழங்கப்படுவது கொண்டு, திருவாளர்கள், மெக்டோனால், கெய்த், மோனியர் வில்லியம்ஸ் ஆகிய வரலாற்றுப் பேராசிரியர்கள், சிப்பியிலிருந்து விடுவிக்கப்பட்டது எனப் பொருள் கூறி, அச்சொற்களுக்குச் சமஸ்கிருதப் பிறப்பியல் கூறவும், திருவாளர் அய்யங்கார் அவர்கள், அவர்களின் அம்முடிவை மறுத்துவிட்டு, வேதகால ரிஷிகள் தென்கோடி முத்தோடு, முத்து எனும் பொருள் உடையதான "முத்தம்" என்ற அதன் பெயரையும் கடனாகப் பெற்று, "முக்தா" என்ற சமஸ்கிருத வடிவமும் கொடுத்து விட்டனர் என உறுதி தொனிக்கும் குரலில் கூறியுள்ளார். (பக்கம் : 23, 24).

தமிழகத்தின் தென்கோடியில் வழங்கிய முத்து என்ற தமிழ்ச்சொல், கி. மு. 1500க்கு முன்னரே, வடஇந்தியாவுக்குச் சென்று, அவ்வடவர்களால், "முக்த" என்ற அவ்வடவர்களின் சமஸ்கிருத வடிவம் பெற்று வழங்கலாயிற்று என்றால், கி. மு. நான்காம் நூற்றாண்டில், அதாவது தமிழகத்து "முத்து" என்ற தமிழ்சொல், வடநாட்டிற்குச் சென்று, அவ்வடமொழி வடிவினதாக மாறி வழங்கப்பட்ட காலத்துக்கு இரண்டா யிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்ட காலத்தில், தமிழகத்தின் வடவெல்லை நாட்டு நகரின் பெயராம் காஞ்சி அவ்வடவரால், அப்பிற்பட்ட காலத்தே கொண்டு வரப்பட்ட "காஞ்சீபுரம்" என்ற சமஸ்கிருதச் சொல்லின், சுருங்கிய

வடிவமாம் எனல் எங்ஙனம் பொருந்தும். காஞ்சி என்பதே பழந்தமிழ்ப் பெயர்; தங்கள் ஊர்ப் பெயர்களோடு "புரம்" என்பதை இணைக்கும் வழக்கத்தை ஒட்டி, காஞ்சி வந்த ஆரியர்கள், அக்காஞ்சி என்பதன் பின்னர்ப் புரம் என்பதை இணைத்துக் காஞ்சீபுரம் என ஆக்கிவிட்டனர் என்பதே மொழி வளர்ச்சியின் இயல்பு நெறியாகும்.

ஆக, இதுகாறும் எடுத்து வைத்த விரிவான, விளக்கச் சான்றுகளால், "பழந்தமிழ்ப் பாக்களில், காஞ்சி நாடாண்ட பழந்தமிழரசர் பெயர் குறிப்பிடப்படவில்லை; அந்நாட்டுக் காஞ்சி, கச்சி என்ற பெயர்கள் தாமும் தமிழ்ச் சொற்கள் ஆகா; வடக்கிலிருந்து வந்து அங்கு வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர்கள், அந்நகருக்கு இட்டு வழங்கிய சமஸ்கிருதப் பெயராக, "காஞ்சீபுர" என்பதன் சுருங்கிய வடிவமும், அதன் தமிழாக்க வடிவமுமே ஆம் என்ற, திருவாளர் அய்யங்கார் அவர்களின் கூற்றிற்கான அகச்சான்று எதுவும் இல்லை ; அது வெறும் கற்பனையே, என்பதும், மாறாக அந்நாடாண்ட பழந்தமிழ் அரசர் பெயர் குறிப்பிடப்பட்டுளது ; காஞ்சி என்பது, பழந்தமிழர் அறிந்த தனித்தமிழ்ப் பெயரே; கச்சி, அதன் தமிழாக்கம் அன்று, மாறாகக், காஞ்சியின் மற்றொரு பெயர் என்பதற்கான அகச்சான்றுகளே நிறைந்துள்ளன என்பதும் தெளிவாக்கப்படவே, "காஞ்சி மாநகர், தமிழ்நாட்டின் எல்லைக்குள் இடம் பெற்றிருந்தாலும், பண்டைக்காலத்தில், அது தமிழர் நாகரிகத்தைக் கொண்டிருக்கவில்லை; மாறாகச் சமஸ்கிருத நாகரிகத்தின் ஒரு நாயகமாகவே இருந்தது; அது, தமிழ் அரசர்களாலும் ஆளப்படவில்லை; மாறாக, ஆரிய ராஜாக்களால் ஆளப்பட்டது" என்ற அய்யங்கார் கூற்று, உண்மைக்கு அப்பாற்பட்டது என்பது உறுதிபடத் தெளிவாக்கப்பட்டது.

தொண்டை மண்டலத்துத் தலைசிறந்த நகரின் பெயர். கி. மு. இரண்டாவது நூற்றாண்டு தொட்டே, "காஞ்சி" என்ற தனித் தமிழ்ச் சொல்லினாலேயே பெயர் பெற்றிருந்தது என்பதை உறுதி செய்யும் வலுவான வரலாற்றுச் சான்று ஒன்றும் உளது.

திருவாளர், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் தம்முடைய "தென்னிந்தியா பற்றிய வெளிநாட்டவர் குறிப்புகள்" (Foreign Notices of South India) என்ற ஆங்கில நூலின் நான்காம் பக்கத்தில், "திருவாளர் பால் பெல்லியோட் (Pawl Pelliot) என்பாரின் கண்டுபிடிப்பாம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து தொடங்கும் "ஹன்" (Han) இனத்தவர் ஆட்சிக்காலத்தில், சீனாவுக்கும், தென்னிந்தியாவுக்கும் இடையில் மிகப்பெருமளவிலான போக்குவரத்து நிலவியதை உறுதி செய்யும், திருவாளர் "பான் கௌ" (Pan kaw) என்ற, நனிமிகப் பழம்பெரும் சீன எழுத்தாளரின் படைப்பின் ஒரு பகுதி, அண்மைக்கால வரலாற்று ஆய்வு அளித்த நனிமிகு வியத்தகு முடிவு" எனப் பால் பெல்லியோட் என்பாரை அறிமுகம் செய்துள்ளார்.

பின்னர், 44, 45 பக்கங்களில், "கி. மு. இரண்டாம் நூற்றா ண்டில் காஞ்சியும் சீனாவும்" என்ற தலைப்புள்ள இரண்டாம் அதிகாரத்தில், முதல் பத்தியில், "கி. பி. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த, "பான் கௌ" (Pan Kow) என்ற சீன எழுத்தாளர், தம்முடைய "இட்சின் ஹன் சௌ" (Tsein han chow) என்ற நூலின், "தொன்கின்" (Tonkin) வளைகுடாவின் உள் நாடாம், "மேல் அன்னம்" (Upper Annam) என இப்போது வழங்கப்படும் "ஜே-நன்" (Je-Nan) நுழைவாயிலிலிருந்து புறப்பட்டு, படகுவழியாக, ஐந்து திங்கள் பயணம் செய்து, "தொன்-யுவான்" (Ton-Ywan) நாட்டை அடைந்தோம். பின்னர்க் கடல் வழி நான்கு திங்கள் பயணத்திற்குப் பின்னர், 'யி-லௌ-மொ' (Yi-Low-Mo) என்ற நாட்டை அடைந்தோம். மேலும் இருபது நாட்களுக்கு மேற்பட்ட கடல் பயணம் மேற்கொண்ட பின்னர்ச் "சென்-லி" (Chen-Li) என்ற நாட்டை அடைந்தோம், அங்கிருந்து நீங்கள், பத்துநாட்களுக்கு மேற்பட்ட நிலவழிப் பயணம் மேற்கொண்டால், 'பவு-கன்-தௌ-லொ' (Fow-Kan-Tow-Low) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டிலிருந்து படகு வழியாக இரு திங்களுக்கு மேல் பயணம் செய்தால், 'ஹௌங்-டெக்' (Howang teche) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டுப்

பழக்கவழக்கங்கள், 'தச்சௌயை' (Tchow-yai) நாட்டுமக்கள் பழக்கவழக்கங்கள் போலவே உள்ளன. இந்நாடு பரந்து அகன்று, மக்கள் பெருக்கத்தால் மிகுந்து, அரும்பொருட்கள் பலவற்றை ஆக்குவதாக விளங்குகிறது. கி. மு. 140-86 காலத்தவரான, பேரரசர் 'வௌ' (Wow) காலம் முதல், அரும் பொருட்களைச் சீனாவிற்கு அனுப்பி வைக்கிறது" என எழுதி வைத்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

"பான்-கௌ" என்ற சீன எழுத்தாளன் கூறியதை, முதல்பத்தியில் எடுத்துக் காட்டிய திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், இரண்டாவது பத்தியில், "டௌங்-பாவோ" (Towng-pao) என்ற நூலில், திருவாளர் 'பால்பெல்லி யோட்' அவர்கள், 'ஹௌஆங்-டெக்' (Hawang-teche) என்ற தொடருக்குப், பல்வேறு வரலாற்றுப் பேராசிரியர்கள் அளிக்கும் விளக்கங்களையெல்லாம் மறுத்துவிட்டு, 'ஹன்' (Han) காலத்துச் சீனமொழி ஒலியியல் கூற்றுப்படி, 'ஹௌ ஆங்-டெக்' என்பதற்குக் "காஞ்சி" என்பதே ஏற்புடைய இணையாம்" எனத் திருவாளர் பெர்ரன்ட் (Ferrand) என்பார் கூறும் விளக்கத்தையும் எடுத்தாண்டுள்ளார்.

அதுமட்டுமல்லாமல், கி.பி. 11ஆம் நூற்றாண்டில், சோழப் பேரரசு, சீனப்பேரரசுக்கு அனுப்பிய தூதுவர், சீனா சென்றடைய எட்டுத் திங்களை எடுத்துக் கொண்டுள்ளார் என்பதை எடுத்துக் காட்டுவதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், சீன யாத்திரிகன் ஒருவன், காஞ்சி வந்து சேர, 12 திங்களை எடுத்துக்கொள்ள நேர்ந்தது என்பது ஏற்கக் கூடியதே என்பதை வலியுறுத்தும், திருவாளர் பால் பெல்லியோட், அவர்களின் வாதத்தையும் எடுத்து வைத்துள்ளார், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் (பக்கம் : 45).

ஆக, மேலே கூறியிருப்பனவற்றையெல்லாம் எடுத்தாண்டி ருப்பதன் மூலம், கி.மு. இரண்டாம் நூற்றாண்டு காலத் திலேயே காஞ்சிநாடு, 'காஞ்சி' என்ற பெயரிலேயே இடம் பெற்றிருந்தது. சீன நாட்டிற்கு அரும்பொருட்களை அனுப்பும் வளம்மிக்க நாடாகவும் திகழ்ந்தது என்பதற்கான

தம்முடைய ஒப்புதலைத் திருவாளர் நீலகண்ட சாஸ்தியார் அவர்கள், தந்துள்ளார் என்பது தெளிவாகிறது.

மேலும், சென்னைப் பல்கலைக் கழகத்தில், பண்டை வரலாற்று மற்றும் தொல்பொருள் துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்த திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்கள் 1963-இல் ஆற்றிய ஆறு விரிவுரைகளின் தொகுப்பாக, 1968-இல் வெளியிடப்பட்ட, "தென்னிந்திய பண்டை வரலாற்றில் காஞ்சீபுரம்" (Kancheepuram in Early South Indian History) என்ற தம் நூலில், "காஞ்சீபுரம், அதன் தொடக்கம்" (Kancheepuram its Beginning) என்ற முதல் அதிகாரத்தில், பக்கம் 9-இல் கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், காஞ்சியின் நிலைகுறித்துத் திரு. பான்கொள என்ற சீன எழுத்தாளன் கூறிய இதே நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார்.

1939 ஆம் ஆண்டில், அதாவது திருவாளர். பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள், 'தமிழர் வரலாறு' என்ற தம்முடைய நூலை வெளியிட்ட பத்து ஆண்டுகள் கழித்து, வெளியிடப் பட்ட திருவாளர், நீலகண்ட சாஸ்திரியார் அவர்களின், "தென்னிந்தியா பற்றிய வெளிநாட்டவர் குறிப்புகள்" என்ற நூலையோ, திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்களின் நூலையோ திருவாளர் அய்யங்கார் அவர்கள் பார்த்திருக்க வாய்ப்பு இல்லை. ஆகவேதான் 'காஞ்சி' என்பது, தமிழ்ச் சொல் அன்று, "காஞ்சீபுரக" என்ற சமஸ்கிருதச் சொல்லின் சுருங்கிய வடிவம் : அதன் தமிழாக்கமே கச்சி என்றும், காஞ்சி மண்டலம் தமிழரசர்களால் ஆளப்படவில்லை; மாறாக, சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டிருந்தது என்ற தவறான முடிவிற்குத் திருவாளர் அய்யங்கார் அவர்கள் தள்ளப் பட்டுள்ளார்.



# 11. கரிகாலன்

## வெண்ணிப் போர் :

பழந்தமிழ்ப் பாக்களில், பெயர் சுட்டிக் குறிப்பிடப் பட்டிருக்கும் முதல் தமிழ்ப் பேரரசன், கரிகாலன். சமகாலப் புலவர்களால் பாடப்பெற்று, அது காரணத்தால், அவன் வாழ்க்கையைத், திரும்பவும் அமைக்கப் பெருந்துணை புரியும், மூன்று குறும்பாடல்களாலும், இரு நெடும்பாடல்களாலும், அவன் பாராட்டப் பெற்றுள்ளான். அவற்றுள் ஒன்று, பெண்பாற் புலவர் வெண்ணிக் குயத்தியாரால் பாடப்பெற்றது. வெண்ணி எனவும் அழைக்கப்பெறும் அவ்வெண்ணி, தஞ்சை மாவட்டத்தில், தென்னிந்தியப் புகைவண்டித் தொடர் நிலையமாம், இன்றைய கோயில் வெண்ணி ஆகும். பண்டை நாட்களில், பாடற்கலை என்பது, உள்ளுணர்வின் இயல்பான எழுச்சி; கற்றுப்பெற்ற புலமையின் விளைவு அன்று; கவிதைக்கான அகத்தூண்டு தலின் பயன்; பண்டிதர்களின் திட்டமிட்ட படைப்பு அன்று; பழைய தொகை நூல்களால், சான்று காட்டல் போல், அனைத்து இனம், அனைத்து நிலைகளையும் சேர்ந்த ஆடவர், மகளிர் ஆகிய இருவரும் பாக்கள் புனைந்தனர். வெண்ணியைச் சேர்ந்த குயவர் மகள், வெண்ணிக்குயத்தியார் வெண்ணிப்பறந்தலைப் போரில், பகைவன் ஒருவன்பால், கரிகாலன் கொண்ட வெற்றிக் கொற்றத்தையும், தோற்று அவமானப்பட்ட அப்பகைவனின் தற்கொலைக் கொடு மையையும் பாடியுள்ளார். இவ்வாறு செல்கிறது, அப்பாட்டு :- "நீரால் நிறைந்த பெரிய கடலில் காற்றின் துணை இன்றிப் பெருங்கலங்கள் ஓடாதாக, ஆங்கு அக்காற்றினை ஏவல் கொண்டு நாவாய் ஓட்டிய வலியோன் மரபில் வந்தோனே! போர்மதம் மிக்க யானைப் படையுடைய

கரிகால் வளவ! படையெடுத்துச்சென்று, பகைவர் ஆற்றிய போர்த் தொழிலை அழித்து, உன் பேராண்மை வெளிப்பட வெற்றி கொண்டவனே! ஆரவாரம் மிக்க புதுப்புது வருவாய்களைக் கொண்ட வெண்ணி எனும் இடத்தில் நடைபெற்ற போர்க்களத்தில், பெரும்புகழை இப்பேருலகில் நிலைபெறப் பண்ணிப் போரில் புறப் புண் பெற்றமைக்கு நாணி, வடக்கிருந்து உயிர் நீத்த உன்பகைவன், நின்னினும் நல்லன் அல்லனோ?

> "நளிஇரும் முந்நீர் நாவாய் ஓட்டி,
> வளிதொழில் ஆண்ட உரவோன் மருக !
> களிஇயல் யானைக் கரிகால் வளவ !
> சென்று அமர்க்கடந்த நின் ஆற்றல் தோன்ற
> வென்றோய் ! நின்னினும் நல்லன் அன்றே !
> கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
> மிகப்புகழ் உலகம் எய்திப்
> புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே".

புறநானூறு : 66.

மிகச் சிறந்த பெரும்பாட்டாம் பொருநராற்றுப் படையிலும் (பொருநனுக்குப் பொருள் கிடைக்கும் இடமும் வழியும் கூறும் பாட்டு) - இப்போர் குறிப்பிடப்பட்டுளது. கரிகாலன் சமகாலத்தவரும், யாதோ ஒருவகையில் முடம்பட்ட உடலுறுப்புடையாரும், தலைமாலை அணிந்தவரும் ஆகிய முடத்தாமக் கண்ணியாரால், கரிகாலனின் கொலை வளம் பாராட்டப் பெறும் அப்பாட்டு, கரிகாலனை இவ்வாறு சிறப்பிக்கிறது : "கரியபெரிய பனைமரத்தின் குருத்து ஓலையாலாம் மாலையும், கரிய அடிமரத்தினையும் கிளைகளையும் கொண்ட, மரம் அறுக்கும் வாளின் வாய்போன்ற வேம்பின் அழகிய தளிர்களால் ஆன மாலையும், புகழால் உயர்ந்த பெரிய தலையில், மேலும் புகழ்பெருக முறையே அணிந்து கொண்ட சேரனும், பாண்டியனும், ஒரே போர்க்களத்தில் இறந்து போமாறு,

வெண்ணி என்ற ஊரின்கண்ணே நடைபெற்ற போரில் அவரோடு போரிட்ட, பகைவர் அஞ்சத்தக்க பேராண்மை யினையும், அதற்கேற்ற பெருமுயற்சியினையும், கண்ணுக்கு அழகூட்டும், ஆத்திமாலையினையும் உடைய கரிகால் வளவ !"

"இரும் பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிரும் சென்னி மேம்பட மிலைந்த,
இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்,
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவ!"

- பொருநராற்றுப்படை : 143 - 148.

போரில் புறப்புண் பெற்றுவிடும் அரசன், போர்க்களத்தில், தன் கழுத்தைத் தன் கைவாளால் தானே அறுத்துக்கொண்டு விடுதல், பழம்பாக்களில், "வாளொடு வடக்கிருத்தல்" என்ற மரபுத் தொடரால் அழைக்கப்படும். "வடக்கிருத்தல்" என்ற தொடர், வடக்கு நோக்கி இருந்து உயிரைப் போக்கிக் கொள்வது, அல்லது வடக்கே உள்ள ஓர் இடத்தை அடைந்து, உண்ணாது இருந்து உயிர்விடுவது என்னும் பொருள் உடையதாகும். கரிகாலனின் பகைவர், ஒரு பாண்டிய வேந்தனும், மற்றொரு சேர வேந்தனுமாவர். இவர்களுள், பின்னவன், வெண்ணிப்போரில் வடக்கிருந்து உயிர்விட்ட செய்தி, அந்நிகழ்ச்சியை இறந்தகால நிகழ்ச்சியாகக் கூறுவதால், காலத்தால் பிற்பட்டதான ஓர் அகப்பாட்டிலும் கூறப்பட்டுளது.

"கரிகால் வளவனொடு வெண்ணிப்பறந்தலை
பொருது புண் நாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள் வடக்கு இருந்தென."

- அகம் : 55 : 10 - 12.

சேரலாதன், சோழ அரசன் கரிகால் வளவனோடு, வெண்ணிப்போர்க் களத்தில் போரிட்டுத் தோற்றுப் போரில்

புறப் புண் பெற்றமைக்கு நாணி, அப்போர்க்களத்திற்கு அணித்தாக வாளோடு வடக்கிருந்து உயிர்விட்டான். இப்பாட்டில் அச்சேரன், சேரலாதன் எனப்பட்டுள்ளான். இச்சேர வேந்தனின் இச்செயலைக் குறிப்பதாகச் செய்யுள் மூலத்தில் எதுவும் இல்லை ஆயினும் 65 ஆம் எண், புறநானூற்றுச் செய்யுளும், இப்போர் பற்றிக் கூறுவதாகக் கூறப்படுகிறது.

"தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப்புண் நாணி, மறத்தகை மன்னன்
வாள்வடக்கு இருந்தனன்."

-புறம் : 65 : 9 - 10

[மறம் மிக்க மன்னன், தன்போலும் மறம்மிக்க பேரரசன் தன் ஆண்மை குறித்து எறிந்த வேலால் முதுகில் புண் பெற்றுவிட்டமைக்கு வெட்கி, வாளோடு வடக்கிருந்து உயிர்விட்டான்.]

புறப்பாடல்களைத் தொகுத்துப் பதிப்பித்த ஆசிரியர், அகம் 55 ஆம் எண் செய்யுள், சேரலாதன் வடக்கிருந்ததைக் குறிப்பிடுவதால், இப்புறப்பாடலும் (65) அதே நிகழ்ச்சியைக் குறிப்பதாகவே கருதி, அச்செய்யுளின் கீழ்க் கொடுத்திருக்கும் கொளுவிளக்கத்தில் அவ்வாறே கூறியுள்ளார். அகம், அவன் பெயரைச் சேரலாதன் என்று குறிப்பிட்டிருக்க, இப்பாட்டின் கொளு, அவன் பெயரைப் பெருஞ்சேரலாதன் என்று அழைக்கிறது. இச்சேரனின் பெயர், இக்கொளுவில் அல்லாது, வேறு எந்தச் செய்யுளிலும் இடம்பெறவில்லை யாகவே, இவ்வேந்தன் குறித்து இது தவிர்த்து வேறு எதுவும் தெரியவில்லை.

## கரிகாலன் இளமை வாழ்க்கை :

பொருநராற்றுப்படை, கரிகாலன், தலைநகரை, உறையூரிலிருந்து, காவிரி கடலோடு கலக்குமிடத்தில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்திற்கு மாற்றுவதற்கு முற்பட்டதான, அவனுடைய ஆட்சிக்காலத்து முற்பகுதியில் பாடப்

பட்டிருக்க வேண்டும். அது, அவனை இளையோன், தந்தையின் இறப்பிற்குப் பின்னர்ப் பிறந்தவனாகக் குறிப்பிடுகிறது. “வெல்லும் வேற்படையினையும், அழகிய பல தேர்ப்படைகளையும் உடைய இளஞ்சேட் சென்னியின் திருமகன்; முருகக் கடவுளின் சினம்போலும் கடுஞ்சினம் உடைமையால், பகைவர்களை உளம் நடுங்கப் பண்ணும் தலைமையுடையான், தாயின் வயிற்றில் கருவாக இருக்கும் போதே, அரச உரிமையைப் பெற்றவன். பண்டு அவன் வலியறியாது பகைத்து நின்ற பகைவர், பின்னர் அவன் வலியறிந்து வந்து அவன் ஏவல் கேட்டு நின்றனர். அவன் ஏவல் கேட்டு அதன்படி நடந்துகொள்ளாத பகை நாட்டவர், அவனால் வர இருக்கும் கேடுகளை எண்ணிக் கலக்கம் உற்றிருந்தனர். உலகத்து உயிர்கள் அனைத்தும் விரும்பும் வெம்மையுடையோனாகி இளஞாயிறு, பகற்போதைச் செய்யும் தன் கதிர்களைக் கடல்மீது பரப்பியவாறே எழுந்து, பின்னர், மெல்லமெல்ல விண்ணிடத்தே உயர்வது போலப் பிறந்து, மண்ணில் தவழக் கற்றுக் கொண்ட அந்நாள் தொடங்கி, நாடாளும் பெரும்பாரத்தைத் தன் தோள் மேற்கொண்டு, அதன் வளத்தை நாள்தோறும் பெருக்கினான். ஆளி என அழைக்கப்படும் நல்ல விலங்காம் சிங்கத்தின், எதிர்ப்படும் அனைத்து உயிர்களையும் வருத்தும் குட்டி, கூற்றுவன் ஆற்றலிலும் மிக்க ஆற்றல் உடைமையால் செருக்குற்றுப் பால் உண்டலைக் கைவிடமாட்டா அத் துணை இளம் பருவத்தில் இரைதேடிச் சென்ற முதல் வேட்டையில், களிற்று யானையைக் கொன்று வீழ்த்தியது போலக் கரிகாலன் வெண்ணியில் இருபெரு வேந்தரை அழித்தான். ஆகக் கரிகாலன் பாண்டிய, சேர அரசர் இருவரை வெற்றி கொண்டான்.

“வெல்வேல்

உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்,

முருகன் சீற்றத்து உருகெழு குருசில்,

தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,

எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பச்,

செய்யார் தேஎம் தெருமரல் கலிப்பப்,
பௌவம் மீமிசைப் பகல்கதிர் பரப்பி,
வெவ்வெம் செல்வன், விசும்பு படர்ந்தாங்குப்,
பிறந்து, தவழ்கற்றதன் தொட்டுச், சிறந்த நன்
நாடு செகின் கொண்டு நாள்தொறும் வளர்ப்ப,
ஆளிநன்மான், அணங்குஉடைக் குருளை,
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி,
முலைக்கோள் விடாஅ மாத்திரை, ஞெரேர்எனத்
தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு"

- பொருநராற்றுப்படை (129-142).

வெண்ணிப்போர் பற்றிய பாடற்பகுதி, இவ்வாறு தொடர்கிறது. இப்பாட்டின் பிற்பகுதியில், அவன் இளமைப் பருவத்து நிகழ்ச்சி ஒன்று மறைமுகமாகக் குறிப்பிடப் பட்டுளது. (முதியோர் "அவை புகு பொழுதில் தம் பகைமுரண் செலவும்" பொருநராற்றுபடை. 187 - 188) முதியோர் இருவர் அவன் அறங்கூர் அவைக்குட் புகுந்து, தங்கள் இருவர்க்கிடையே எழுந்த வழக்கு ஒன்றை, அவன் முன் வைக்க, அவன் அவ்விருவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க தீர்ப்பை வழங்கினான். "அவைபுகு பொழுதில் தம் பகை முரண் செலவும்" - பொருநர் : 188. இலக்கிய வகையில், அத்துணை நிறைபயன் அளிக்காப் பாட்டு ஒன்றில், இந்நிகழ்ச்சியின் போது, தன்னுடைய தளி இளமைப் பருவத்தை மறைப்பதற்காக, நரைமயிர் கொண்டு - ஆக்கிய தலைமுடியை அணிந்து கொண்டான் என்பது குறிப் பிடப்பட்டுளது.

"உரைமுடிவு காணான் ; இளமையோன்" என்ற
நரைமுது மக்கள் உவப்ப - நரைமுடித்துச்
சொல்லான் முறை செய்தான் ; சோழன், குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்.

- பழமொழி : 25.

"வழக்கில், இவன், நல்லதீர்ப்பு காண மாட்டான். காரணம்; ஆண்டால் இளையவன்" என்று கூறிய நரைத்து முதிர்ந்த பெருமக்கள், உவக்குமாறு, நரைமுடித்து முதியவன் போல் தோன்றி, நல்லதீர்ப்பு வழங்கினான் சோழன். ஆகவே, குலவித்தை யாவர்க்கும், கல்லாமலே, அதாவது இயல்பாகவே உண்டாகிவிடும். பொருநராற்றுப்படையின் பிறிதொரு பகுதியில், அவன் உலகனைத்தையும் ஒரு குடைக் கீழ்க் கொண்டுவந்து ஆண்டான் எனக் குறிப்பிடப்பட்டுளது.

"ஒரு குடையான் ஒன்று கூறப்
பெரிது ஆண்ட".

- பொருநராற்றுப்படை : 228 - 229.

வெண்ணிப் பறந்தலையில், தன் பகைவர்களாம், பாண்டிய சேர வேந்தர்களை வெற்றிகொண்ட பின்னர்த் தமிழ்நாடு முழுவதிலும் தன் அரசை நிலை பெறச் செய்தான் என்பது இதன் பொருளாதல் கூடும். ஆனால், இப்பாட்டின் இறுதியில், "காவிரி காக்கும் நாட்டின் தலைவனே !" "காவிரி புரக்கும் நாடு கிழவோனே! (248) எனக் குறிப்பிட்டு அழைக்கப்பட்டுள்ளான். ஆதலால், கரிகாலன், பாண்டிய சேர நாடுகளைச் சோழ நாட்டோடு இணைத்துக்கொண்டா னல்லன். மாறாகத் தன்னைப் பணிந்து, தன் ஏவல்கேட்கும் சிற்றரசர்களாம் நிலைமையையே, அவர்களிடமிருந்து எதிர் பார்த்தான் எனக் கொள்ளலாம்.

## தொடக்க நாட்களில் புலவர் புரவு :

கரிகாலன் உறையூரிலிருந்துகொண்டு, காவிரி நாட்டை ஆண்டிருந்தபோது, பிற்காலத்தில், போஜராசனைப் போல, அவன், புலவர்களைப் பேணும் பெரும் புரவலனாய் விளங்கினான். கரிகாலன் அரசவையில், தமக்கு அளிக்கப் பட்ட வரவேற்புச் சிறப்பு குறித்து, முடத்தாமக்கண்ணியார் கூறுவது, இது: "பழுமரத்தை நினைத்து பறந்து விரையும் பறவைக்கூட்டம்போல, நானும், அவன் மாநகர் மதிலின் கண் அமைந்துள்ள, அவனை விரும்பி வருவார்க்கு என்றும்

அடையாதே திறந்து கிடக்கும் கோபுரவாயிலுள், அவ்வாயிற் காவலுக்குக் கூறாமலே புகுந்து. ஆரவாரப் பேரொலி எப்போதும் எழும், பரந்து அகன்ற இடம் உடையதான அரண்மனைக்குள் சென்றேன். வறுமையால் வாடியிருந்த என் மேனி, அவன் அரண்மனைக்கு வந்த விட்டோம் என்ற களிப்பு மிகுதியால் வாட்டம் தீர்ந்துவளம் பெற்றது. படம் விரித்து எழும் பாம்பின் படத்தில் காணப்படும், கவர்த்த கருங்கோடுபோல், கை விரல்களால் அடியுண்டு அடியுண்டு அமைந்துவிட்ட கரும் வடுவினைக் கொண்டு இருபக்கமும் அகன்று, இடைசிறுத்த உடுக்கை எழுப்பிய இரட்டை தாள இசைக்கு ஏற்ப, வாய்ப்பாட்டு ஒன்றினைப் பேரொளியுடைய தான வெள்ளியாகிய வான்மீன் தோன்றிவிட்ட, மிக்க இருள் செறிந்த விடியற்போதில், பாடத் தொடங்கினேன். நான், அவ்வாறு தொடங்குவதற்கு முன்னரே, தன்னுடைய நெருங்கிய உறவினரைப் போலவே, என்னுடன் உறவு கொள்ள விரும்பினான். வரையாது கொடுத்து வான்புகழ் ஈட்டுவதற்கு வாய்ப்பாக, எப்போதும், நான், அவனிடமே சென்று இரந்து நிற்பதற்கு ஏற்ற, இனிய முகமன் உரைகளை மொழிந்தான். நான் எப்போதும், அவன் கண்ணில் பட்டுக் கொண்டிருக்குமாறு, மிக அணித்தான ஓர் இடத்தை எனக்கு அளித்தான். தன் கண்களால், என்னை அப்படியே விழுங்கி விடுவதுபோலும் பார்வையால், என் உடலெலும்புக ளெல்லாம், அன்பின் மிகுதியால், வெண்ணெய்போல இளகிவிடும் வண்ணம், அன்புத் தண்ணருளைச் சொரிந்தான். ஈரும் பேனும் கூடியிருந்து ஆட்சிசெய்யும், வேர்வையால் நனைந்து நனைந்து நைந்துபோன, வேற்றுநூல் இடையே நுழைவதற்கு ஏற்பப் பெரிய அளவில் கிழிந்து, தைக்கப்பெற்ற என் கந்தல் ஆடையை அறவே அகற்றிவிட்டு, இது இழையோடிய வழி எனக் கண்ணால் கண்டுகொள்ளாவாறு நுண்ணிதாக நெய்யப் பெற்ற, பூத்தொழில்களால் புனையப்பட்ட, பாம்பின்தோல் போலும் மென்மையான ஆடைகளை அளித்தான். கார்மேகமோ எனக் கண்டவர் மருளுதற்கேற்பக் கறுத்து நீண்ட கூந்தலையுடையவரும், மகிழ்ச்சிதரும் மேனில மாடங்களில் உலாவருவாரும்,

அணிகள் பல அணிந்து அழகுற்றவரும், எப்போதும் இனிய புன்னகையே உடையாருமாகிய ஏவல் மகளிர், கள்ளைக் குற்றமற்ற பொன்னால் செய்யப்பட்ட கலங்கள் வழியுமாறு, பலகாலும் வார்த்து வார்த்துத் தர, வழிநடை வருத்தம் தீர நிறைய உண்டு, காண்டற்கினியகள் கிடைக்கப் பெற்றிலமே என, நெஞ்சிற்கிடந்த பழங்கவலையும் தீர்ந்து போகப்பெற்று மகிழ்ந்திருந்தேன். மாலை வந்துற்றதும், செல்வம் மலிந்து கிடக்கும், அம்மன்னவன் அரண்மனையில் ஒருபால் தங்கியிருந்தேன். தவஞ்செய்வார், அத்தவம் மேற்கொள்ளும் தம் உடம்பை அழித்துக் கொள்ளாமல் இருந்தே, அத்தவத்தாலாம் பயனை அடைவது போலவே, வழிநடை வருத்தத்தைச் சிறிதும் இல்லாவாறு போக்கிக் கள்ளை அளவிறந்து உண்டுவிட்டதன் விளைவாம் உடல் உறுப்புக்களின் நடுக்கமல்லது வேறு மனக் கலக்கம் ஏதும் இன்றி, மெய் மறந்து உறங்கிப் பின்னர்த் துயில் ஒழிந்து எழுந்தேன். நாம் பெற்றிருக்கும் இவ்வினிய வாழ்க்கை உண்மையானதாக இருக்குமோ என ஐயுற்றுக் கலங்கும் என் நெஞ்சம், இது கனவன்று; நனவுதான் என்று துணிந்து கொள்ளவும், கொடிய வறுமையால் உற்ற துன்பத்தால் நிறைந்திருந்த என் உள்ளம், பெற்றுள்ள பேரின்ப வாழ்க் கையை எண்ணி எண்ணி மகிழவும், கரிகாலனைக் கண்ட நாளைய முன்னாள் மாலையில், என்னிடத்தே குடி கொண்டிருந்த கொடிய வறுமைக்காட்சிகளையும் கரிகாலனைக் கண்டுவிட்ட அன்றைய காலைப்போதில், "நெடுநல் நாம் கண்ணுற்ற இரவலன் தானா இவன் !" எனப் பார்த்தவர் மருண்டு போவதற்குக் காரணமாம் வகையில், அகிலும் ஆரமும், மலரும் போலும் மணப்பொருள்களை மேனியெங்கும் கொண்டுவிட்டமையால் வண்டுகள் வந்து மொய்க்குமளவு பெற்றுவிட்ட வளமார் பெருவாழ்வினையும், உலகியல் கல்லா இளம் பருவத்தினராய சிறார்கள் சொல்லிச் சொல்லிக் காட்டுவாராயினர்".

"பழுமரம் உள்ளிய பறவையின், யானும், அவன்
இழும் என் சும்மை, இடனுடை வரைப்பின்

நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்,
இசையேன் புக்கு, என் இடும்பைதீர,
எய்த்த மெய்யேன், எய்யே னாகிப்,
பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்பக்,
கைக் கசடு இருந்த என் கண்ணகன் தடாரி
இருசீர்ப் பாணிக்கு ஏற்ப, விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்
ஒன்றியான் பெட்டா அளவையின், ஒன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
வேளாண் வாயில் வேட்பக் கூறிக்,
கண்ணிற் காண நண்ணுவழி இரீஇப்,
பருகு வன்ன அருகாம் நோக்கமொடு
உருகு பவைபோல் என்பு குளிர்கொளீஇ,
ஈரும் பேனும் இருந்து இறை கூடி
வேரொரு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னல் சிதாஅர் துவர நீக்கி,
நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி அன்ன அறுவை நல்கி
மழையென மருளும் மகிழ்செய் மாடத்து
இழையணி வனப்பின் இன்னகை மகளிர்
போக்கில் பொலங்கலம் நிலையப் பல்கால்
வாக்குபு தரத்தர, வருத்தம் வீட,
ஆர வுண்டு பேரஞர் போக்கிச்
செருக்கொடு நின்ற காலை, மற்றவன்
திருக்கிளர் கோயில் ஒருசிறைத் தங்கித்,
தவம்செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது
அதன்பயம் எய்திய அளவை மான,
ஆறுசெல் வருத்தம் அகல நீக்கி,

அனந்தர் நடுக்கம் அல்லது யாவதும்
மனம்கவல்பு இன்றி மாழாந்து எழுந்து,
மாலை அன்னதோர் புன்மையும், காலைக்
கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்
கனவென மருண்ட என் நெஞ்சம் ஏமாப்ப,
வல்லஞர் பொத்திய மன மகிழ் சிறப்பக்,
கல்லா இளைஞர் சொல்லிக் காட்ட,"

- பொருநராற்றுப்படை : 64 - 100.

இரவலர்க்கு, இவ்வாறு உண்ணவும் குடிக்கவும் கொடுத்ததோடு, அவர்களுக்கு, நெருங்க முடித்த முடிகளைக் கரையிலேயுடைய பட்டாடைகளைக் கொடுத்தான் ("கொட்டைக் கரைய பட்டுடை நல்கி" (பொருநர் : 155). தனக்கு என இதழ்களைப் பெறாத, பொன்னால் பண்ணப்பட்ட, தாமரை போலும் வடிவுடைய மலர்களைக் கொடுத்தான். ("ஏடுஇல் தாமரை" பொருநர் : 159). யானைத் தந்தத்தால் பண்ணப்பட்ட தாமரை மொட்டினைக் கொண்ட நெடிய தேரில், சாதிலிங்கம் ஊட்டப்பெற்ற தலையாட்டம் அணி செய்யக் கழுத்து மயிர் அழகு செய்ய, மேனி நிறத்தில் பாலை ஒத்த குதிரைகள் நான்கினைப் பூட்டிக் கொடுத்தான்.

"கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர்,
ஊட்டுளை துயல்வர, ஓரி நுடங்கப்
பால்புரை புரவி நால்கு உடன் பூட்டி"

- பொருநர் : 163 - 165.

### பிற்கால வாழ்க்கை :

கரிகாலன் புகழ்பாடும் பிறிதொரு நெடும்பாட்டு, காவிரிப்பூம்பட்டினம் விரிவாக விளக்கிக் கூறப்படும், பாலைத்திணைப் பொருளாகக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப்பாலை ஆகும். அதில், அப்புலவர், கரிகாலனிடம் பரிசில் பெறுவான் வேண்டிக்

காவிரிப்பூம்பட்டினம் செல்லத்துடிக்கும் தன் நெஞ்சை நோக்கிச், "காதலியை விடுத்து, நெஞ்சே! நின்பின் வாரேன்" எனக் கூறியுள்ளார்.

"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிரும் கூந்தல் வயங்கிழை ஒழிய
வாரேன்: வாழிய, நெஞ்சே!"

- பட்டினப்பாலை : 218 - 20.

(என்ற தொடருக்கு அவர் கூறும் இதுவன்று பொருள், "காவிரிப்பூம்பட்டினமே கிடைப்பதாயினும், என் காதலியைப் பிரிந்து, அப்பட்டினம் போலும் பெருஞ்செல்வம் தேட விரையும் நெஞ்சே! உன்பின் வாரேன்" என ஒரு காதலன் கூறினான் என்பதே இதன் பொருள் : பாடியவர், உருத்திரங்கண்ணனார் ஆயினும், இது அவர் கூற்று அன்று, ஒரு காதலன் கூற்று; அவன் கூற்றைப் புலவர் எடுத்துக் கூறினார் என்பதே பொருள்).

கரிகாலன், தன் ஆட்சிக் காலத்தில், தலைநகரை, உறையூரிலிருந்து, வளர்ந்து வரும் இக்கடற்கரை நகருக்கு மாற்றினான். பற்பல நிலைகளைக் கொண்ட மாளிகைகளைக் கொண்ட உறையூரில், திருக்கோயில்களோடு, மக்கள் குடியிருப்புக்களையும் நிறுவினான். பெரிய வாயில்களோடு, சிறுசிறு வாயில்களையும் அமைத்தான். அந்நகரைச் சூழ உள்ள மதில்கள் தோறும், அம்புக்கட்டுகள் போலும் படைக்கலப் பொறிகளையும் நிறுவினான்.

"பிறங்குநில மாடத்து உறந்தை போக்கிக்,
கோயிலொடு குடிநீறீஇ.
வாயிலொடு புழை அமைத்து
ஞாயில்தொறும் புதை நிறீஇ"

- பட்டினப்பாலை : 285-288.

இப்பாட்டு, இளமைப் பருவம் தொட்டு நடைபெற்ற கரிகாலன் வெற்றிச் செயல்களை விளக்கிக் கூறுகிறது. தந்தை

இறந்த பிறகு பிறந்த மகனாதலின், சோழ அரியணையை, அவன் இடையூறுகள் இல்லாமல் அடைந்து விட்டானல்லன்; இளையவனாய் இருக்கும்போது, அடாவழியில் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டவரால், அவன் சிறை செய்யப்பட்டான். அச்சிறையினின்றும் விடுதலைபெற, அவன் போராடினான். புலவர் கூறுமாறு "கூரிய நகத்தினையும், வளைந்த வரிக்கோடுகளையும் உடைய புலிக்குட்டி, கூட்டிலே அடைபட்டிருந்து வளர்ந்தது போலப், பகைவர் இட்ட சிறையகத்தே இருந்து, தனக்குரிய அறிவு ஆண்மைக் குணங்களால் வயிரம் மரம் போல் முதிர்ந்து, குழியில் அகப்பட்டுக்கொண்ட நீண்ட கையினைக் கொண்ட ஓர் ஆண்யானை, அக்குழியின் ஏறுதற்கரிய கரைகளைத் தன் கோட்டால் குத்திச் சரித்துக் குழியைத் தூர்த்துவிட்டு ஏறித் தன் பிடியோடு சேர்ந்து கொண்டதுபோல், சிறையினின்றும் வெளியேறி, வெற்றி கொண்டு அரியணையில் அடையும் வழிமுறைகளைப் பலகாலும் ஆராய்ந்து, அப்பகைவரின் அழிக்கலாகாத் திண்மை வாய்ந்த காவற்சிறை மதிலைக் கடந்து வெளிப்போந்து, வாள்கொண்டு போர் செய்து வென்று, தன் அரச உரிமையை முறைப்படி அடைந்தான்."

"கூர் உகிர்க்
கொடுவரிக் குருளை, கூட்டுள் வளர்ந்தாங்குப்,
பிறர், பிணியகத்து இருந்து, பீடுகாழ் முற்றி,
அருங்கரை கவியக் குத்திக், குழிகொன்று,
பெருங்கை யானை, பிடி புக்காங்கு,
நுண்ணி தின் உணர நாடி, நண்ணார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி, வாள் கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி".

- பட்டினப்பாலை : 220-227.

அரச உரிமையை இவ்வாறு பெற்றுக்கொண்டதோடு, மனநிறைவு கொள்ளாத அவன், பிறநாடுகள்மீது போர் தொடுத்துச் சென்றான். அவனுடைய நாற்படையைச் சேர்ந்த

யானைகள், தம் அரசனைப் பகைத்துக்கொண்ட பகை யரசர்களின் அரண்மதிலையும், வாயிற்கதவையும் தம் கோடுகளால் அழிக்கும்; அப்பகையரசர்களின் மணிமுடி அணிந்த தலைகளைக் கூரிய உகிர்களைக் கொண்ட முன் கால்களால் உதைக்கும்.

"பெற்றவை மகிழ்தல் செய்யான் : செற்றோர்
கடியரண் தொலைத்த கதவு கொள் மருப்பின்,
முடியுடைக் கருத்தலைப் புரட்டும் முன்தாள்
உகிருடையடிய, ஓங்கு எழில் யானை".

- பட்டினப்பாலை : 228 - 31.

அவன், தன் பேரரசை விரிவுபடுத்த உறுதி பூண்டான். ஒளியர் குலத்தலைவர் பலரை மறங்கெடப்பண்ணிப் பணி கொண்டான். பழம்பெரும் பெருமை வாய்ந்த அருவா நாட்டவர், தாங்கள் செய்யும் தொழில் எதுவேயாயினும், அதை, இவன் ஏவல் கேட்டுச் செய்யுமளவு பணிந்து போயினர். அவ்வருவா நாட்டிற்கும் வடக்கில் உள்ளார் எல்லாம் வலியிழந்து வாடினர். குடநாட்டு அரசர் மன வெழுச்சி குன்றி அடங்கிக் கிடந்தனர். பாண்டியர் வலியிழந்து போயினர். பகையரசர்களின் எளிதில் பாழற்றுப் போகாத் திண்மை வாய்ந்த அரண்மதிலைக் கைப்பற்றும் உள்ளச் செருக்கும், வலிய கால்களும் கொண்ட யானைப் படையும், மறத்தால் சிறந்த வலிமையும் உடைமையால், புல்லிய முல்லை நிலத்துக் குறுநிலத் தலைவர்களின் கால்வழி முழுவதும் கெட்டொழியவும், இருங்கோவேளின் பெருஞ்சுற்றம் பாழ்பட்டுப் போகவும், சினம் மிகுதலால் சிவந்து விட்ட கண்களால் வெகுண்டு நோக்கினான்.

"பல் ஒளியர் பணிபு ஒடுங்கத்,
தொல்அரு வாளர் தொழில் கேட்ப,
வடவர் வாடக், குடவர் கூம்பத்,
தென்னவன் திறல்கெடச் சீறி, மன்னர்,
மன்எயில் கதுவும் மகனுடை நோன்தாள்

*மாத்தானை மற மொய்ம்பின்,*
*செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்,*
*புன்பொதுவர் வழிபொன்ற,*
*இருங்கோவேள் மருங்கு சாய"*

*- பட்டினப்பாலை : 274 - 282.*

*இப்பட்டியலில் கூறப்பட்டவருள், இருங்கோவேள், என்ற குறுநிலத்தலைவன், புதுக்கோட்டை மாவட்டத்தில், திருச்சிராப்பள்ளி, மதுரை நெடுஞ்சாலைக்கண் உள்ள பழைய நகராம் கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டிற்குத் தெற்கில் உள்ள மாவட்டங்களை ஆண்டிருந்தான். அருவா நாட்டுக் குறுநிலத் தலைவனும், ஒளியர்குலத்தலைவனும், சோழ, பல்லவ நாடுகளுக்கு இடைப்பட்ட மாவட்டங்களை ஆண்டு வந்தனர். இவ்விரு நாடுகளையும் வெற்றி கொண்டுவிடவே, கரிகாலன், வடவர்களை, அதாவது, காஞ்சி ராஜாக்களாம் பல்லவர் களைப் பணி கொண்டான். அவன், மேலும் படையெடுத்துச் சென்று, கடப்பை, கர்னூல் மாவட்டங்களை ஆண்டு கொண்டிருந்த பொதுவர் குலத் தலைவர்களைத், தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தான். பொதுவர் என்ற சொல், ஆயர் தலைவர் எனும் பொருள் உடைத்து, ஆகவே, அது பல்லவ நாட்டின் மருத நிலப்பகுதிக்கு வடக்கில் உள்ள முல்லை நாட்டுப் பழங்குடியினர் தலைவர்களைக் குறிப்பதாகும். கரிகாலனால், தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவரப் பட்ட அவ்வாயர்கள், அம்மாவட்டங்களில், இன்றும் வாழ்ந்து, அப்பகுதியில் புகழ் பெற்ற கம்பளி நெய்யும் குறும்பராவர்". ருெம்புகழ்க் குரியவனும், வெல்லும் போர் வல்லவனுமாகிய கரிகாலன், குன்றுகளில் ஆனிரை மேய்க்கும் குறும்பர் குடியைப் பேணிக்காத்தான்.*

*"குறும்பறை பயிற்றும்*
*செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்*
*வெல்போர்ச் சோழன்" - அகம் : 141 : 21-23.*

இப்பாட்டிலிருந்து உய்த்துணரப்படும், கரிகாலன் ஆட்சி, வடக்கே, கடப்பை, கர்னூல் மாவட்டங்கள் வரையும் பரவியிருந்தது என்ற உண்மையை உறுதி செய்வதற்கு எண்ணற்ற கல்வெட்டுச் சான்றுகளும் உள. அவை, தனியே ஆராயப்படும்.

இப்பாட்டு, கரிகாலன், காடுகளை அழித்து அவற்றை யெல்லாம் வாழிடங்களாக மாற்றினான் என்றும் கூறுகிறது. ("காடுகொன்று நாடு ஆக்கி"- பட்டினம் : 283). அது, சோழ நாட்டில் நிகழ்ந்ததாக, உரையாசிரியர் விளக்கம் கூறுகிறார். ஆனால் சோழ நாடு முழுவதும், இம்மன்னனுக்கு நெடுங்காலத்துக்கு முன்பிருந்தே மக்களால் வாழப்பட்டு விட்டது; ஆகவே, இச்செயற்கரும் செயல், மிகமிகக் குறைவான மக்கள் தொகையினை உடையவாய கடப்பை, கர்னூல் மாவட்டங்களையே குறிப்பிடுவதாகும். (சோழநாடு, ஐந்நிலம் என அழைக்கப்படாமல் நானிலம் என்று மட்டுமே அழைக்கப்படுவதற்கு ஏற்ப, ("நால்நாடு"- பொருநர் : 226) அந்நாட்டில் பெருமணல் பரந்த பாலை நிலம் அறவே இல்லை.) "உள்ளூர் ஆவணங்கள், பழைய "ரேனாடு" ஆகிய இன்றைய கடப்பை, கர்னூல் மாவட்டத்து மக்கள், கரிகாலன் படையெடுப்பை, இன்றும் நினைவில் கொண்டுள்ளனர் என்பதை வெளிப்படுத்துகின்றன. "கைம்யத்" ஆவணம் ஒன்றின்படி, சூரிய வம்சத்துக் கரிகால மகாராஜா, மேற்கை வெற்றி கொண்டுவிடவே, இந்நாட்டின் உரிமையை பெற்றுவிட்டான். "கரிகிரி" மலையின் தென்பால் சரிவில் காடுகளை அகற்றிப் "பொத்தப்பி" என்ற ஒரு சிற்றூரை நிறுவினான். அதைச் சூழ, எண்ணற்ற சிற்றூர்கள் தோன்ற ஊக்கம் ஊட்டினான். அச்சிற்றூர்களில், பொத்தப்பி, மிகவும் முக்கியமானதாக இருந்தமையால், அதைச் சூழ உள்ள சிற்றூர்கள், "பொத்தப்பி நாடு" என்ற பெயரைப் பெற்றன. (திரு. என். வெங்கட்ரமனய்யா அவர்கள், சென்னைக் கிறித்துவக் கல்லூரி மலர், 1929 சனவரி வெளியீட்டில் எடுத்தாண்டிருக்கும் L.R. Vol. 22. பக்கம் : 141ன் எடுத்தாட்சி) ஆவணத்திலிருந்து மேலே எடுத்துக் காட்டப்பட்ட பகுதியில் உள்ளடங்கியிருக்கும் அக்காதுவழிச் செய்தி, கரிகாலன்,

காடுகளை அழித்து, அவற்றை வாழிடங்களாக மாற்றினான் என்ற புலவர் கூற்றிற்குச் சரியான விளக்கமாம் என்பதில் ஐயம் இல்லை. ஆகவே, கரிகாலன் ஆட்சி, தமிழ்நாடு முழுவதிலும், தெலுங்கு நாட்டின் ஒரு பகுதியிலும் பரவியிருந்தது; அவன், மக்களின் விவசாயத் தொழில்களை வளர்த்தான். வாணிகத்திற்கு ஊக்கம் ஊட்டினான். ஆகவே, அவன் நாடு வளம் பெற்றிருந்தது என முடிவு கொள்ளலாம்.

**புதிய தலைநகர் :**

முதலாவது உரிமை கொண்ட தன் நாடுகளைத் தன்னுடைய கப்பற்படையால், தன் பிடியின் கீழ்க் கொண்டிருக்கலாம். இரண்டாவது, கடல் வாணிகத்திற்கு அங்கிருந்தவாறே ஊக்கம் ஊட்டி, இவ்வகையால், தன் அரசு வருவாயைப் பெருக்கலாம், என்பதற்காகவே தன் தலைநகரை, உறையூரிலிருந்து, பழைய கடற்கரை நகராம் காவிரிப் பூம்பட்டினத்திற்கு மாற்றியதாகத் தெரிகிறது. அந்நகரைச் சூழ, வெற்றித்திருமகள் வாழும் திண்ணிய மதில்களை எழுப்பி, அவற்றிற்குப் பெரிய மரக்கழிகளை இணைத்துப் புலிச்சின்னம் பொறித்துப் பண்ணப்பட்ட வாயிற்கதவுகளை அமைத்தான் என்கிறது பட்டினப்பாலை.

"புலிப்பொறிப் போர்க் கதவின்
திருத்துஞ்சும் திண் காப்பு" - 40 - 41.

இப்பாட்டு, அந்நகரையும், அதன் புறநகர்ப் பகுதிகளையும் விரிவாக விளக்குகிறது. தமிழகத்துப் பேரூர் ஒன்றின் சமஸ்கிருத இலக்கியங்களில் காணப்படும் விளக்கங்கள் போல் அல்லாமல், மிகைப்படுத்தப்படாத, உள்ளது உள்ளவாறேயான, மிகப்பழைய விளக்கம் இது ஆதலின், அது, அப்படியே தருவதற்குத் தகுதி வாய்ந்தது. "அன்று முழுமதி நாள்; செம்பட்டை மயிருடையராகிய பெரிய பரதவர், கருமை நிறம் காட்டிக் குளிர்ந்திருக்கும் பரந்த கடல் மீது மீன்பிடிக்கப் போகவில்லை. அப்பாக்கத்தின் இடையில், மீன்பிடிக்கும் நெடிய தூண்டிற்கோல் சார்த்தப்பட்டிருக்கும் தாழ்ந்த கூரைகளைக் கொண்ட குடில்களின் முற்றத்து

வெண்மணல் பரப்பில், நிலவொளியும், நிறை இருளும் மாறி மாறி, விட்டு விட்டுப் படிந்து கிடப்பதுபோல், மீன்பிடி வலைகள் விரித்துப் போட்டு உலர்த்தப்பட்டிருக்கும். பரதவர், தழையாடை உடுத்திருக்கும், மாமை நிற மேனியராம் மகளிரோடு, விழுதுகள் தொங்கும் தாழையின் அடியில் வளர்ந்திருக்கும் வெண்தாளி மலர் மாலை அணிந்து, கொடிய சினம் உடையதான சுறாமீனின் கொம்பை, அம்மணல் பரப்பில் நாட்டி அக்கொம்பில் குடிகொண்டிருக்கும் கொடிய தெய்வத்தை வழிபடல் கருதித் தலைமயிரில் தாழைமலர் அணிந்து, சருக்கை வாய்ந்த அடியினையுடைய பனைமரத்துக் கள்ளையும், தாம் விரும்பும் உணவு வகைகளையும், உண்டு, மகிழ்ந்து ஆடிக்களிப்பர். புலால் நாறும் மணற்பரப்பையும், மலர்களையும் உடைய கடற்கரைக்கண், கரிய மலையை அடைந்த, பொன்னிற மாலை முகில் போலவும், கரிய நிறமேனித் தாய் மடியில் பால் உண்ணத் தவழ்ந்து கிடக்கும், செம்பட்டை மயிரினரான மழலை போலவும், தெளிந்து நீல நிறம் காட்டும் கடல் நீரோடு, காவிரி ஆற்றுக் கலங்கள் செவ்வெள்ளம், கலக்கும் அலைகளின் ஒலிஓயா அப்புகார்ப் பகுதியில், பண்டைய பாவம் போகக் கடல் நீரில் ஆடியும், கடல் நீர் ஆடியதால் உடலில் படிந்துவிட்ட உப்பு மாசினைப் போக்க நறும்புனலில் மூழ்கி எழுவர், அடுத்து நண்டுகளைப் பிடித்து ஆட்டம் காட்டுவர்; உரங்கொண்டு பாயும் அலைகளைக் கால்களால் உழக்கி விளையாட்டயர்வர், மணலில் பாவை பண்ணுவர்; ஐம்பொறிகளாலும் நுகரும் இன்பங்களையெல்லாம் நுகர்ந்து தீர்ப்பர். இவ்வாறு ஆடி இன்பம் நுகர்ந்தும் மனநிறைவு காணாமல், மேலும் மேலும் நுகரவேண்டும் என்ற தீராக் காதலோடு பகலெல்லாம் ஆடி மகிழ்ந்துவிட்டு, இரவு வந்துற்றதும், அப்பெருங் காவிரி மணலிலேயே படுத்து உறங்கிவிடுவர்."

"எக்காலத்தும் பொய்த்துப்போகாது, ஆண்டு முழுவதும் நீரோடிக்கொண்டிருக்கும் அக்காவிரி ஆற்றின், மலர்கள் உதிர்ந்து மண்டிக்கிடக்கும் இருகரை மருங்கிலும், நெடிய தூண்கள் மீது வானளாவக் கட்டப்பட்டிருக்கும் மாளிகை களில் வாழ்வார், இசைப்பாடல் செவிமடுத்தும், நாடகங்

களை நயந்து கண்ணுற்றும் மகிழ்வர். (ஈண்டு ஆளப் பட்டிருக்கும் நாடகம் என்ற சொல், சமஸ்கிருத "நாடக" என்ற சொல்லாம், தமிழ்ப்பாக்களில் அச்சொல்லின் முதலாட்சி இது. இது, பெரும்பாலும், சமஸ்கிருத நாடகத் தோடு தொடர்பு கொள்வதற்கு முன்னர்த் தமிழ்நாட்டில் பெரு வழக்கில் இருந்த உரையிலா மெய்ப்பாட்டு நாடகம் ஆதல் கூடும்.) மகளிர், மேனிலை மாடங்களில், நிலவொளியின் இன்பம் காண்பர்; கள் உண்டல் விடுத்துக் காமரசம் பருகுவர். பட்டாடை அகற்றிப் பருத்தி ஆடை உடுப்பர்; அக்கோலத்தோடே, தம் கணவரைத் தழுவியவாறே உறங்கச் செல்வர். காதல் மயக்கத்தில், கணவர் அணிந்து கொள்ளும் தலைமாலையை மனைவியரும், மனைவியர் சூடிக்கொள்ளும் கழுத்து மாலையைக் கணவரும் மாறி அணிந்துகொள்வர். பகற்போதில், மீன்பிடி படகுகளில் கடல் மேல் சென்ற பரதவர், அந்நள்ளிரவில், கரைக்கண் மாடங்களில் வரிசை வரிசையாக ஏற்றப்பட்டிருக்கும் விளக்குகளில், அவிந்தனபோக, அவியாது பேரொளி காட்டி எரிந்துகொண்டிருக்கும் விளக்குகளை எண்ணியவாறே கரைநோக்கி மீள்வர்.

வெண்ணிற மலர்க் கொத்துக்களையும், மடல்களையும் கொண்ட தாழை மண்டிக்கிடக்கும் கடற்கரைக்கண், வணிகப் பெருமக்கள் வாழும், அகன்று நீண்ட தெருக்களில் அமைந்துள்ள, காவல் மிக்க பண்டக சாலைகளில், மேகம், கடலிடத்தே முகந்துகொண்ட நீரை மலையிடத்தே பொழிவதும், மலையிடத்தே பெய்த மழைநீர், கடலில் சென்று சேர்வதும் மாரிக்காலத்தில், மாறி மாறி நிகழ்வது போலக் கடல்வழி வந்து கலங்களிலிருந்து இறக்கப் படுவனவும், நானிலங்களிலிருந்து வந்து நாவாய்களில் ஏற்றப்பட இருப்பனவுமாய பண்டப்பொதிகள் எண்ணிக் காணமாட்டா அளவு குவிந்துகிடக்கும். அப்பண்டங்களுக் கான சுங்க வரியைக் கணக்கிட்டுத் தண்டிக்கொண்டு, அதற்கு அடையாளமாகச் சோழ அரசின் புலிச்சின்னம் பொறிக் கப்படும். அது செய்து அரசன் வருவாயைப் பெருக்கும் கடமையுணர்ச்சியால் புகழ் கொண்டவர்களாகிய சுங்க

வாழ்வார், அது கீழ்க்கடல் ஒலியோ எனக்கொண்டு அஞ்சி ஆரவாரித்தனர்- கீழ்த்திசை வாழ்வார் அது மேலைக்கடல் ஒலியோ எனக்கொண்டு அஞ்சி ஆரவாரித்தனர்." என்கிறது.

"குடகர் குணகடல் என்று ஆர்த்தார்; குடநர்க்கு
இடவர் குடகடல் என்று ஆர்த்தார் - வடகடல்
தென்கடல் என்று ஆர்த்தார் தென்தில்லை அச்சுதா! நின்தன்
முன் கடை நிற்றார்க்கும் முரசு"

சேர, சோழ, பாண்டியராகிய இவ்வரசர்கள் எல்லாம் திரண்டிருந்த தென்தில்லை, ஆரிய மயமாக்கப்பட்ட அந்நாள் தொட்டுத் தங்கள் முடிசூட்டு விழாவினைச் சோழர்கள் மேற்கொள்ளும் இடம் சிதம்பரமே ஆம். சிதம்பரம் பெரிய கோயில், அக்காலத்தில் தெய்வத்தன்மைக்காகப்புகழ் பெற்று விளங்கியதால், அச்சுதனும், அவ்வழக்கத்தை மேற் கொண்டான் போலும்.

பாண்டியர்கள், கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் மீண்டும் செல்வாக்கு பெற்றுவிட்டனர் ஆதலாலும், பல்லவர்கள், அந்நூற்றாண்டின் இடைக்காலத்தில் காஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டனர் ஆதலாலும், தமிழ் நாடு முழுமைக்கும் பேரரசனான ஒரு களப்பாளனுக்குக் கி. பி. 450க்கும் 550க்கும் இடைப்பட்ட காலத்தில்தான் இடம் காண முடியும். ஆகவே, இந்த அச்சுத களப்பாளன், புத்ததத்தர் கூறும் அச்சுத் களப்பாளனே ஆதல் வேண்டும். ஒரே அரசன் சைவ, பௌத்த, சமண சமயங்களைப் புரந்திருக்க முடியாது என்றும், தில்லைச் சிவன் கோயிலில் முடிசூட்டு விழா மேற்கொண்டு, சோழநாட்டில் புத்த விகாரங்களை ஆதரிப்பதும், மதுரையில் திராவிட சமண சங்கத்தை ஆதரிப்பதும் செய்யஇயலாது என்றும் கூறும் தடை, மதிக்கத்தக்க தடையாகாது. தென்இந்தியாவில், ஆரிய சமயங்கள் பரவத்தொடங்கிய பழங்காலத்தில், அவர் களிடையே புறச்சமயவெறுப்பு சிறிதளவே குடி கொண்டிருந்தது. புறச்சமய வெறுப்பு முதன்முதலில்

தலைதூக்கிய கி. பி. 600க்குப் பிறகே அவர்கள் சண்டை தொடங்கலாயிற்று. மகேந்திர விக்ரம பல்லவன் சமணர் களுக்கும், சிவனுக்கும், விஷ்ணுவுக்கும், திரிமூர்த்திக்கும் கற்கோயில்கள் கட்டினான். அவனுடைய காலத்தில்தான். சமணர்களுக்கும் சைவர்களுக்கும் இடையில் எழுந்த முதல்வாய்ச்சண்டையினைக் கேட்கிறோம். ஒரு நூற்றாண் டிற்குப் பின்னர், வைஷ்ணவர்கள், சைவர்களை எள்ளி நகையாடுவதையும் சைவர்கள், விஷ்ணுவை மதிக்காது பழிப்பதையும் நாம் காணுகிறோம். ஆனால் கி. பி. 600க்கு முன்னர், ஆரியச் சமயநெறி நிற்போர், செல்வாக்கும் பெறத்தொடங்கியபோது, அவர்கள் ஒருவரையொருவர் எதிர்ப்பதை நாம் கேட்கவில்லை. ஆகவே, அச்சுதகளப் பாலனும், அச்சுதகளப்பனும் ஒருவரே என எடுத்துக் கொள்ளலாம்.

23வது அதிகாரத்தில் ஆராயப் பெற்ற கேள்விக்குடி செப்பேடு, களப்ரன் அதாவது, களப்ரா வழிவந்தவன் என்ற கொடுங்கோல் அரசன் ஒருவன் பல அதிராஜாக்களையும், பழையதமிழ் அரசர்களையும் வென்று, ஏனைய தமிழ் மாவட்டங்கள் அல்லாமல் மதுரையிலும் தன் ஆட்சியை நிறுவினான் எனக்கூறுகிறது. பாலிமொழி, "களப்ஹற", சமஸ்கிருதத்தில் "கலப்ர" என முறையாகத் திரியும் ஆதலின், வேள்விக்குடிச்செப்பேட்டின் களப்ர அரசன், அச்சுத களப்பன், மற்றும் அச்சுத களப்பாளனே ஆவன் என்பது தானே பெறப்படும். தமிழ்நாட்டினைத் தன் ஆட்சிக் கீழ்க் கொண்டு வருவது முழுமை பெற்றுவிட்டது எனக் கூறப்படும் நிலையிருந்தாலும், பழைய தமிழ் அரச இனங்கள், வேரொடு கல்லி எறியப்பட்டு விடவில்லை. பாண்டியர்கள், கடுங்கோன் ஆட்சியின் கீழ், கி. பி. 600-இல், தம் பெருமையை மீண்டும் நிலநாட்டிக் கொண்டனர்; சேர, சோழ, பாண்டியர் மற்றும் களப்பிரர், இரண்டு நூற்றாண்டு வரை, பல்வேறு கல்வெட்டுகளிலும், செப்புப்பட்டயங்களிலும், முதலில் பல்லவரின் பகைவர்களாகவும், பின்னர்ச் சாளுக்கியர் பகைவர்களாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

மூவேந்தர்களும், களப்பாளரைத் தமிழிலேயே பாடிப் பராட்டியுள்ளமையால் உறுதிப்படுவதால், களப்பாளர்கள், தமிழ்க் குறுநிலத் தலைவர்களே ஆவர். அவர்கள், ஆரிய சமயங்களைப் பேணிப்புரந்தமையால், அவர்கள், அறவே ஆரிய மயமாக்கப் பட்டுவிட்டனர். தமிழ் நாகரிகத்தைப் பல நூறு ஆண்டுகாலமாகச் சுற்றிவளைத்துக் கிடந்த, ஆரிய நாகரிகம், பழையதமிழ் மரபுகளைப் பேணிக்காத்துவந்த, பழந்தமிழ் அரச இனம் மூன்றும், அச்சுதன் ஆற்றலின் முன் நிலைகுலைந்து போன அந்நாள் தொட்டுத், தமிழர் சிந்தனைச் செல்வங்களை வியத்தகுநிலையில் கைப்பற்றிக் கொண்டது.

## களப்பிரர், கள்ளரா?

திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், களப்பிரர், பழந்தமிழ்ப்பாக்களில் இடம் பெற்றிருக்கும் கள்ளர் ஆவர் என்ற கொள்கைக்குத்துணை செய்கிறார். "கள்ளர்" என்பதற்குக் "கள்வர்" என்ற மாற்றுவடிவம் உண்டு; "களவர்" என்பது, பழைய ஓலைச்சுவரிகளில் "ள" என்பதன் கண் உள்ள புள்ளி இடப்பெறாமல் "களவர்" என ஆதலும் உண்டு. "களவர்" என்ற அது, "களபர்" "களபா" "களப்ஹர" என்றும் இறுதியாக "களப்ஹ்ர" என ஆகும். ஆனால், "களப்ஹ" என்ற சொல் பாலிமொழியிலிருந்து கண்டு கொண்டோம் ஆதலின், இதற்குத் தமிழில் சொல்லாக்க விதிகளைத் தேடி அலையத்தேவையில்லை. அது மட்டும் அல்லாமல் பண்டைக் காலத்தில், கள்வர், குறுநிலத் தலைவர்களுக்கு மேலாவர் என்பதற்கான அகச்சான்று எதுவும் இல்லை.

## "கலப்பாளர்" என்ற சொல்குறித்து ஒரு வார்த்தை :

மெய்கண்ட தேவரின் தந்தையார் அல்லாமல் மேலும் பல களப்பாளர்கள், தமிழ்இலக்கியங்களில் காண்ப்படுகின்றனர். நெடுமாறன் கிழான் என்ற ஒரு களப்பான அரசன், பதினாறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தாம் கண்டு பிடித்த கல்வெட்டு ஒன்றிலிருந்து திரு. எஸ். சோமசுந்தர தேசிகர் அவர்களால், ம் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளான். [செந்தமிழ்

பகுதி : 12 பக்கம் : 268]. அறுபத்திமூன்று சைவ நாயன் மார்களில் ஒருவரான கூற்றுவநாயனார் ஒரு களப்பாளன் எனத் தம்முடைய திருத்தொண்டர் திருவந்தாதியில், நம்பியாண்டார் நம்பி அவர்களால் [பத்தாம் நூற்றாண்டு] அழைக்கப்பட்டுள்ளார். [செய்யுள் 47; வரி 4]. இவன் சேக்கிழாரால் [பதினொன்றாம் நூற்றாண்டு] "களந்தை முதல்வனார்" என்றும் "களந்தை வேந்தர்" என்றும் அழைக்கப்பட்டுள்ளான் [பெரியபுராணம்; கூற்றுவநாயனார் புராணம்] உமாபதி சிவம் அவர்களின் திருத்தொண்டர் புராணசாரத்திலும் அவ்வாறே குறிப்பிடப்பட்டுள்ளான். இவற்றிலிருந்து களப்பாளர், தொடக்க காலத்தில், தஞ்சை மாவட்டத்துப் புகழ் பெற்ற கோயில் ஊராகிய களந்தை என்ற ஊரைச்சேர்ந்தவராவர் என உணர்ந்த கொள்ளலாம். "ஆளர்" என்ற விகுதி, பிராமணர்களைக் குறிக்கும் தமிழ்ச்சொல்லாகிய அந்தணாளர் என்பதில் வரும் விகுதி போன்றதே ஆம். இச்சொல்லாக்கம் குறித்து ஒன்றும் ஏற்றுக் கொள்ளக் கூடாததான நகைப்பூட்டவல்ல சொல்லாக் கங்களை, உரையாசிரியர்கள் கண்டுபிடித்துள்ளனர். களப்பாளர் என்பது, பாலியில் "களப்ஹ" என்றும் தென்னாட்டுச் சமஸ்கிருதத்தில் "களப்ஹர" என்றும் உருவுதிரியும் "களப்ப" என்பதன் மறுவடிவமே ஆம்.





*திருநெல்வேலி, தென்னிந்திய*
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்*

## தலைமை நிலையம்:

154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை – 18.

## கிளை நிலையங்கள்:

79, பிரகாசம் சாலை, (பிராடுவே) சென்னை – 108.
91, கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி – 6.
18, ராஜவீதி, கோயமுத்தூர் – 1
28, நகர் உயர் பள்ளிச் சாலை, கும்பகோணம் – 1.
24, நந்திகோயில் தெரு, திருச்சி – 2
36, செர்ரி ரோடு, சேலம் – 1.
70/71, தானப்ப முதலி தெரு, மதுரை –